التَّجْوِيدُ

# குர்ஆன் ஓதுவதற்கான சட்டங்கள்

## احكام تجويد القران

தொகுப்பு

**கே.எல்.எம். இப்ராஹீம் மதனீ**

ஆசிரியர் – ஸினாயிய்யா இஸ்லாமிய அழைப்பகம்

ஜித்தா, சவூதி அரபியா

***Published by***

***islamkalvi.com Media Team***

இஸ்லாம்கல்வி.காம்

islamkalvi.com

# குர்ஆன் ஓதுவதற்கான சட்டங்கள் : தஜ்வீத்

**Compiled by** : Ash-shaik. KLM Ibrahim Madani

**Type Setting & Design by** : islamkalvi.com Media Team - Saudi Arabia

**Published by** : **www.islamkalvi.com**

**இந்நூலில் குறை இருப்பின் அதை சுட்டிக்காண்பித்தால்**
**நன்றியோடு மறுபதிப்பில் திருத்திக் கொள்வோம்.**

***விற்பனைக்கு அல்ல***

இந்நூல் ஸினாயிய்யா இஸ்லாமிய அழைப்பகம்-ஜித்தா மாணவர்களுக்காக
அஷ்ஷைய்க். இப்ராஹீம் மதனீ அவர்களால் தொகுக்கப்பட்டது.
மேலும் இஸ்லாம்கல்வி.காம் இணையதள வாசகர்களும் பயன்பெறும் நோக்கில்
மின்புத்தகமாக தொகுக்கப்பட்டு பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது.

இந்நூலில் உள்ள பாடங்களின் காணொளிகளைக் காண...
*www.islamkalvi.com/tajweed*
என்ற இணையதள முகவரியை பார்வையிடவும்.

*Sincere Thanks to...*

**Co-Operative Office for Call & Guidance**
Industrial City Phase - 1, Jeddah - Saudi Arabia
www.dawahoffice.org | Tel:+966 12 6369549 | Fax: +966 12 6365051

المملكة العربية السعودية
وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات
بالمدينة الصناعية بجدة
رقم التسجيل : ٢٠٢/٨

دعوة
DAWAH

بِسْمِ اللهِ الرَّحْمَنِ الرَّحِيْمِ

# குர்ஆன் ஓதுவதற்கான சட்டங்கள்

# احكام تجويد القران

குர்ஆனிலுள்ள ஒவ்வொரு எழுத்துக்களையும் அதனதன் வெளியாகும் இடத்திலிருந்து வெளியாக்குதல், நீட்டுதல், குன்னா செய்தல், மெல்லினமாக வல்லினமாக ஓதுதல் இன்னும் இது போன்ற சட்டங்களோடு ஓதுவதற்கு தஜ்வீத் என சொல்லப்படும்.

அன்புள்ள சகோதர, சகோதரிகளே! இன்று முஸ்லிம்களில் எத்தனை சத விகிதமானவர்களுக்கு குர்ஆனை ஓதத் தெரியும்? அப்படி ஓதத் தெரிந்தவர்களில் தஜ்வீத் சட்டத்தோடு ஓதத் தெரிந்தவர்கள் எத்தனை பேர் இருக்கின்றனர்? அப்படி ஓதத் தெரிந்தவர்கள் மிகக் குறைவானவர்களே. இக்குறையை நீக்க வேண்டுமென்ற நன்னோக்கத்துடனேயே இச்சிறிய தஜ்வீத் குறிப்பு தொகுக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே இதைப்படித்து குர்ஆனை உரிய முறையில் ஓதத் தெரிந்துக் கொள்ளுங்கள்.

### குர்ஆன் ஓதுவதின் சிறப்புகள்

1. நீங்கள் குர்ஆனை ஓதுங்கள் அது நாளை மறுமையில் அதை ஓதியவருக்கு சிபாரிசு செய்யும் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். -(முஸ்லிம்)

2. குர்ஆனையும் அதைக்கொண்டு உலகத்தில் அமல் செய்தவர்களையும் நாளை மறுமையில் கொண்டு வரப்படும். சூரத்துல் பகராவும் சூரத்துல் ஆல இம்ரானும் முன்வந்து குர்ஆனை ஓதியவருக்கு (சுவர்க்கத்தைப் பெற்றுக்கொடுப்பதற்காக) வாதாடும் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். -(முஸ்லிம்)

3. குர்ஆனை ஓதியவருக்காக (நாளை மறுமையில்) சொல்லப்படும். “நீர் குர்ஆனை ஓதிக்கொண்டு சுவர்க்கத்தின் (படித்தரத்தில்) ஏறிக்கொண்டு செல்வீராக. உலகத்தில் நிறுத்தி நிறுத்தி ஓதியது போன்று (இங்கேயும்) நிறுத்தி நிறுத்தி ஓதுவீராக. நீர்; ஓதி முடிக்கும் கடைசி ஆயத்தே சுவர்க்கத்தின் உமது அந்தஸ்தாகும் என அவருக்கு கூறப்படும்” என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். -(அபூதாவுத், திர்மிதி)

4. குர்ஆனில் ஓர் எழுத்தை யார் ஓதுகின்றாரோ அவருக்கு ஒரு நன்மை எழுதப்படும். ஒரு நன்மைக்கு பத்து மடங்கு நன்மை கொடுக்கப்படும். "அலிஃப் லாம் மீம்" என்பது ஒரு எழுத்து என்று நான் சொல்லமாட்டேன். அலிஃப் என்பது ஒரு எழுத்தாகும், லாம் என்பது ஒரு எழுத்தாகும், மீம் என்பது ஒரு எழுத்தாகும் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். -(திர்மிதி)

"குர்ஆனை ஓதுவதினால் எந்த அளவுக்கு நன்மைகள் குவிகின்றன" என்பதை எண்ணிப்பாருங்கள். நீங்களும் இந்தக் குர்ஆனை ஒவ்வொரு நாளும் உரிய முறையில் ஓதப்பழகிக் கொள்ளுங்கள். அதன் மொழியாக்கத்தையும் படிப்பினை பெற வேண்டுமென்ற நோக்கத்தோடு நிதானமாகப் படியுங்கள். அதன் ஏவல் விலக்கல்களை எடுத்தும் தவிர்த்தும் நடவுங்கள்.

நிச்சயமாக அல்லாஹ் நமது ஈருலக வாழ்க்கையையும் வெற்றி உள்ள வாழ்க்கையாக ஆக்கப் போதுமானவன். யாஅல்லாஹ்! "இந்தக் குர்ஆனை நாளை மறுமையில் எங்களுக்கு சிபாரிசு செய்யக்கூடிய குர்ஆனாக" ஆக்கி வைப்பாயாக.

அன்புடன்

கே.எல்.எம். இப்ராஹீம் மதனீ
ஜித்தா, சவூதி அரபியா



# சுக்கூன் செய்யப்பட்ட நூனின் சட்டங்கள்

## أَحْكَامُ النُّوْنِ السَّاكِنَةِ

சுக்கூன் செய்யப்பட்ட நூனில் நான்கு சட்டங்கள் உள்ளன. அவை,

1. **இத்காம் (إِدْغَامٌ) - இணைத்தல்**
2. **இல்ஹார் (إِظْهَارٌ) - வெளியாக்குதல்**
3. **இக்லாப் (إِقْلَابٌ) - மாற்றுதல்**
4. **இஃக்ஃபா (إِخْفَاءٌ) - மறைத்தல்**

## 1.1. இத்காம் (إِدْغَامٌ) - இணைத்தல்

இத்காம் என்பது சுக்கூன் செய்யப்பட்ட நூனுடைய உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துக்களுடன் இணைத்து ஓதுதலாகும். இத்காமுடைய எழுத்துக்கள் ஆறு. அவை,

ي ر م ل و ن

சுருக்கமாக يَرْمَلُوْنَ என்று விளங்கிக் கொள்ளலாம். இத்காம் இரண்டு வகைப்படும். அவை,

1. **இத்காமுன் பிகுன்னா - إِدْغَامٌ بِغُنَّةٍ**
2. **இத்காமுன் பிகைரி குன்னா - إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ**

### 1.1.1. இத்காமுன் பிகுன்னா (குன்னாவுடன் இத்காம் செய்தல்) - إِدْغَامٌ بِغُنَّةٍ

இத்காமுன் பிகுன்னா என்பது, சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து ن ، و ، م ، ي என்ற எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால், சுக்கூன் செய்யப்பட்ட நூனுடைய உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து குன்னாவுடன் ஓதவேண்டும். (குன்னா என்பது, மூக்கின் அடிப்பகுதியிலிருந்து வெளிப்படுத்தும் சத்தத்திற்குச் சொல்லப்படும்)

*உதாரணம்:*

1. ي - وَمَنْ يَّعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ خَيْرً ايَّرَهُ
2. م - مِنْ مَّرْقَدِنَا
3. ن - مِنْ نَّبإِ مُوْسَى وَ فِرْعَوْنَ
4. و - وَمِنْ وَّرَاءِ هِمْ

**விளக்கம்:** உதாரணம் 1–ஐ கவனிக்க وَمَـنْ يَّعْمَـلْ உதாரணமாக அடிக்கோடிட்ட இடத்தில் (வமன்யஃமல்) என்று சாதாரணமாக நாம் ஓதுவோம். ஆனால் இத்காமுன் பிகுன்னாவுடைய சட்டத்தின்படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை யாவுடன் இணைத்து (வமய்யஃமல்) என குன்னாவுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

**குறிப்பு:** ஒரு வார்த்தையின் கடைசியில் சுக்கூன் செய்யப்பட்ட நூனும் அதனை அடுத்து இருக்கும் வார்த்தையின் ஆரம்பத்தில் இத்காம் பிகுன்னாவுடைய எழுத்து வரும்போதுதான் இத்காம் பிகுன்னா என்பது வரும். இதற்கு உதாரணம் மேலே கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் ஒரே வார்த்தையில் சுக்கூன் செய்யப்பட்ட நூனும் அதே வார்த்தையில் அதனையடுத்து இத்காம் பிகுன்னாவுடைய எழுத்தும் வந்தால் இங்கே இத்காம் செய்யாமல் நூனுடைய சத்தத்தை வெளிப்படுத்தி ஓதுவது அவசியமாகும். இப்படி குர்ஆனில் நான்கு வார்த்தைகள் மாத்திரமே வந்திருக்கின்றது. அவைகள் பின்வருமாறு:

دُنْيَا ، قِنْوَانٌ ، صِنْوَانٌ ، بُنْيَانٌ

### 1.1.2. இத்காமுன் பிகைரி குன்னா (குன்னா இல்லாமல் இத்காம் செய்வது) - إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ

இத்காமுன் பிகைரி குன்னா என்பது, சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து ل ، ر என்னும் இரு எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால் அப்போது சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து குன்னா இல்லாமல் (சத்தத்தை மூக்கால் வெளிப்படுத்தாமல்) ஓதவேண்டும்.

*உதாரணம்:*

1. ر - مِـنْ رَّبِّ الرَّحِيْمِ
2. ل - مِـنْ لَّـدُنْكَ رَحْمَةً

**விளக்கம்:** உதாரணம் 1–ஐ கவனிக்க مِـنْ رَّبِّ அடிக்கோடிட்ட இடத்தில் (மின் ரப்பி) என்று நாம் சாதாரணமாக ஓதுவோம். ஆனால் இத்காமுன் பிகைரி குன்னாவுடைய சட்டத்தின்படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை றா(ر) உடன் இணைத்து (மிர்ரப்பி) என குன்னா இல்லாமல் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## 1.2. இல்ஹார் (إِظْهَارٌ) - வெளியாக்குதல்

இல்ஹார் என்பது, சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து இல்ஹாருடைய ஆறு எழுத்துக்களில் ஏதேனும் ஓர் எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட நூனின் உச்சரிப்பை கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளபடியே ஓதுதலாகும். இல்ஹாருடைய எழுத்துக்கள் பின்வருமாறு,

ح خ ع غ هـ ء

*உதாரணம்:*

1. ح - فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ
2. خ - وَ أَمَّا مَنْ خَفَّتْ مَوَازِيْنُهُ
3. ع - خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ
4. غ - نُزُلاً مِنْ غَفُوْرٍ رَّحِيْمٍ
5. ه - مَا أَغْنَى عَنْهُ مَالُهُ
6. ء - مِنْ أَهْلِ الْكِتَابِ

**விளக்கம்:** உதாரணம் 1–ஐ கவனிக்க, وَانْحَرْ (வன்ஹர்) இங்கே சுக்கூன் செய்யப்பட்ட நூனுக்கு பிறகு இல்ஹாருடைய எழுத்துக்களில் ஹா(حـ) என்னும் எழுத்து வந்துள்ளது. இல்ஹாருடைய சட்டத்தின் படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை வன்ஹர் என்று கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளபடியே உச்சரிக்க வேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## 1.3. இக்லாப் (إِقْلَابٌ) - மாற்றுதல்

இக்லாப் என்பது, சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து பா(ب) என்னும் எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட நூனுடைய (ன்) என்ற உச்சரிப்பை (ம்) மாக மாற்றி குன்னாவுடன் ஓதுதலாகும்.

*உதாரணம்:*

ب - مِنْ بَيْنِ أَيْدِيْهِمْ

**விளக்கம்:** சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து பா(ب) என்னும் எழுத்து வந்திருப்பதால் (மின் பைனி) என்பதற்கு பதிலாக (மிம்பைனி) என்று குன்னாவுடன் ஓதவேண்டும்.

## 1.4. இஃக்ஃபா (إِخْفَاءٌ) - மறைத்தல்

இஃக்ஃபா என்பது, சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து இஃக்ஃபா உடைய பதினைந்து எழுத்துக்களில் ஏதாவதொரு எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட நூனுடைய உச்சரிப்பை பாதியாக மறைத்து குன்னாவுடன் ஓதுதலாகும். இஃக்ஃபா உடைய எழுத்துக்கள் பின்வருமாறு,

ت ث ج د ذ ز س ش ص ض ط ظ ف ق ك

*உதாரணம்:*

1. ت - قَدْ أَفْلَحَ مَنْ تَزَكَّى
2. ث - وَ مَا خَلَقَ الذَّكَرَ وَالْأُنْثَى
3. ج - وَ لاَ يُغْنِى مِنْ جُوْعٍ
4. د - وَ قَدْ خَابَ مَنْ دَسَّاهَا
5. ذ - فَأَنْذَرْتُكُمْ نَارًا تَلَظَّى
6. ز - قَدْ أَفْلَحَ مَنْ زَكَّاهَا
7. س - سَنُقْرِئُكَ فَلاَ تَنْسَى
8. ش - مِنْ شَرِّ مَا خَلَقَ
9. ص - فَإِذَا فَرَغْتَ فَانْصَبْ
10. ض - إِلاَّ مِنْ ضَرِيْعٍ
11. ط - لَتَرْكَبُنَّ طَبَقًا عَنْ طَبَقٍ
12. ظ - فَلْيَنْظُرِ الْإِنْسَانُ مِمَّ خُلِقَ
13. ف - كَالْعِهْنِ الْمَنْفُوْشِ

*உதாரணம்:*

ق.14 - الَّذِيْ أَنْقَضَ ظَهْرَكَ

ك.15 - وَوَضَعْنَا عَنْكَ وِزْرَكَ

**விளக்கம்:** உதாரணம் 13–ஐ கவனிக்க **الْمَنْفُوْشِ** இங்கே சுக்கூன் செய்யப்பட்ட நூனுக்குப் பிறகு இஃக்ஃபா உடைய எழுத்து ஃபா(**ف**) வந்துள்ளது. இஃக்ஃபா உடைய சட்டத்தின்படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை பாதியாக மறைத்து குன்னாவுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

# 2

## தன்வீனின் சட்டங்கள்

## أَحْكَامُ التَّنْوِيْنِ

தன்வீனில் நான்கு சட்டங்கள் உள்ளன. அவை,

1. **இத்காம் (إِدْغَامٌ) - இணைத்தல்**
2. **இல்ஹார் (إِظْهَارٌ) - வெளியாக்குதல்**
3. **இக்லாப் (إِقْلَابٌ) - மாற்றுதல்**
4. **இஃக்ஃபா (إِخْفَاءٌ) - மறைத்தல்**

### 2.1. இத்காம் (إِدْغَامٌ) - இணைத்தல்

இத்காம் என்பது தன்வீனுடைய உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துக்களுடன் இணைத்து ஓதுதலாகும். இத்காமுடைய எழுத்துக்கள் ஆறு. அவை,

ي ر م ل و ن

சுருக்கமாக يَرْمَلُوْنَ என்று விளங்கிக் கொள்ளலாம். இத்காம் இரண்டு வகைப்படும். அவை,

1. **இத்காமுன் பிகுன்னா - إِدْغَامٌ بِغُنَّةٍ**
2. **இத்காமுன் பிகைரி குன்னா - إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ**

### 2.1.1. இத்காமுன் பிகுன்னா (குன்னாவுடன் இத்காம் செய்தல்) - إِدْغَامٌ بِغُنَّةٍ

இத்காமுன் பிகுன்னா என்பது, தன்வீனை அடுத்து ي ، م ، و ، ن என்ற எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால் தன்வீனுடைய உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து குன்னாவுடன் ஓதவேண்டும். (குன்னா என்பது, மூக்கின் அடிப்பகுதியிலிருந்து வெளிப்படுத்தும் சத்தத்திற்குச் சொல்லப்படும்)

*உதாரணம்:*

1. ي - يَوْمَئِذٍ يَّصْدُرُ النَّاسُ أَشْتَاتًا
2. م - تَرْمِيْهِمْ بِحِجَارَةٍ مِّنْ سِجِّيْلٍ
3. ن - سُلْطَانًا نَّصِيْرًا
4. و - بُكْرَةً وَّأَصِيْلًا

**விளக்கம்:** உதாரணம் 1–ஐ கவனிக்க يَوْمَئِذٍ يَّصْدُرُ என்ற வார்த்தையில் அடிக்கோடிட்ட இடத்தில் சாதாரணமாக (யவ்மஇதின் யஸ்துரு) என்று நாம் ஓதுவோம். ஆனால் இத்காமுன் பிகுன்னாவுடைய சட்டத்தின்படி தன்வீனுடைய உச்சரிப்பை யா(ي) உடன் இணைத்து (யவ்மஇதிய் யஸ்துரு) என குன்னாவுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

### 2.1.2. இத்காமுன் பிகைரி குன்னா (குன்னா இல்லாமல் இத்காம் செய்வது) - إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ

இத்காமுன் பிகைரி குன்னா என்பது, தன்வீனை அடுத்து றா,லா(ل ، ر) என்னும் இரு எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால், அப்போது தன்வீனுடைய (ன்) என்னும் உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து குன்னா இல்லாமல் (சத்தத்தை மூக்கால் வெளிப்படுத்தாமல்) ஓதவேண்டும்.

*உதாரணம்:*

1. ر - غَفُوْرًا رَّحِيْمًا
2. ل - فَوَيْلٌ لِّلْمُصَلِّيْنَ

**விளக்கம்:** உதாரணம் 1–ஐ கவனிக்க, غَفُوْرًا رَّحِيْمًا என்ற வார்த்தையில் அடிக்கோடிட்ட இடத்தில் (கஃபூரன் ரஹீமா) என்று நாம் சாதாரணமாக ஓதுவோம். ஆனால் இத்காமுன் பிகைரி குன்னாவுடைய சட்டத்தின்படி தன்வீனுடைய உச்சரிப்பை றா(ر) உடன் இணைத்து கஃபூரர் ரஹீமா என குன்னா இல்லாமல் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## 2.2. இல்ஹார் (إِظْهَارٌ) - வெளியாக்குதல்

இல்ஹார் என்பது, தன்வீனை அடுத்து இல்ஹாருடைய ஆறு எழுத்துக்களில் ஏதேனும் ஓர் எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட நூனின் உச்சரிப்பை கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளபடியே ஓதுதலாகும். இல்ஹாருடைய எழுத்துக்கள் பின்வருமாறு,

ح خ ع غ هـ ء

*உதாரணம்:*

1. ح - نَارٌ حَامِيَةٌ
2. خ - مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا يَّرَه

*உதாரணம்:*

3. ع - ثُمَّ لَتُسْئَلُنَّ يَوْمَئِذٍ عَنِ النَّعِيْمِ

4. غ - ثُمَّ نَضْطَرُّهُمْ إِلَى عَذَابٍ غَلِيْظٍ

5. هـ - سَلَامٌ هِيَ حَتَّى مَطْلَعِ الْفَجْرِ

6. ء - وَمِنْ شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ

**விளக்கம்:** உதாரணம் 1–ஐ கவனிக்க نَارٌ حَامِيَةٌ (நாருன் ஹாமியா) இந்த உச்சரிப்பில் தன்வீனுக்குப்பிறகு இல்ஹாருடைய எழுத்துக்களில் ஹா(ح) என்னும் எழுத்து வந்துள்ளது. இல்ஹாரின் சட்டத்தின் படி (நாருன்) என்னும் வார்த்தையில் உள்ள தன்வீனுடைய (ன்) என்ற உச்சரிப்பை கூட்டாமலும் குறைக்காமலும் (நாருன் ஹாமியா) என்று உள்ளபடியே உச்சரிக்கவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக்கொள்ளவும்.

## 2.3. இக்லாப் (إِقْلَابٌ) - மாற்றுதல்

இக்லாப் என்பது, தன்வீனை அடுத்து பா(ب) என்னும் எழுத்து வந்தால் தன்வீனுடைய (ன்) என்ற உச்சரிப்பை (ம்)மாக மாற்றி குன்னாவுடன் ஓதுதலாகும்.

*உதாரணம்:*

ب - خَبِيْرٌ بَصِيْرٌ

**விளக்கம்:** தன்வீனை அடுத்து பா(ب) என்னும் எழுத்து வந்திருப்பதால் க(خ)பீருன் பசீர் என்பதற்குப் பதிலாக க(خ)பீரும்பசீர் என்று குன்னாவுடன் ஓதவேண்டும்.

## 2.4. இஃஹ்ஃபா (إِخْفَاءٌ) - மறைத்தல்

தன்வீனை அடுத்து இஃஹ்ஃபா உடைய பதினைந்து எழுத்துக்களில் ஏதாவதொரு ஓர் எழுத்து வந்தால் தன்வீனுடைய உச்சரிப்பை பாதியாக மறைத்து குன்னாவுடன் ஓதுதலாகும். இஃஹ்ஃபா உடைய எழுத்துக்கள் பின்வருமாறு,

ت ث ج د ذ ز س ش ص ض ط ظ ف ق ك

*உதாரணம்:*

1. ت - فَأَنْذَرْتُكُمْ نَارًا تَلَظَّى

உதாரணம்:

2. ث - مُطَاعٍ ثَـمَّ أَمِيْنٌ

3. ج - فِيْهَا عَيْـنٌ جَارِيَةٌ

4. د - كَلاَّ إِذَا دُكَّتِ الأَرْضُ دَكًّـا دَكًّا

5. ذ - يَتِيْمًـا ذَا مَقْرَبَةٍ

6. ز - صَعِيْدًا زَلَـقًا

7. س - وَ رَجُـلاً سَـلَمًا لِرَجُلٍ

8. ش - يَوْمَـئِـذٍ شَـأْنٌ يُغْنِيْهِ

9. ص - وَ جَاءَ رَبُّكَ وَ الْـمَلَكُ صَـفًّا صَـفًّا

10. ض - وُجُوهٌ يَوْمَئِذٍ مُّسْفِـرَةٌ ضَاحِكَةٌ

11. ط - وَ سَبِّحْهُ لَيْـلاً طَـوِيْلاً

12. ظ - ظِـلاًّ ظَـلِـيْلاً

13. ف - أَوْ إِطْعَامٌ فِـيْ يَوْمٍ

14. ق - فِيْهَا كُتُـبٌ قَـيِّمَةٌ

15. ك - نَاصِيَـةٍ كَـاذِبَةٍ

**விளக்கம்:** 13–ஐ கவனிக்க, إِطْعَامٌ فِي இங்கே சுக்கூன் செய்யப்பட்ட நூனுக்குப் பிறகு இஃக்ஃபா உடைய எழுத்து ஃபா(ف) வந்துள்ளது. இஃக்ஃபா சட்டத்தின் படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை பாதியாக மறைத்து குன்னாவுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

# 3

## சுக்கூன் செய்யப்பட்ட மீமின் சட்டங்கள்

## أَحْكَامُ الْمِيْمِ السَّاكِنَةِ

சுக்கூன் செய்யப்பட்ட மீமில் மூன்று சட்டங்கள் உள்ளன. அவை,

1. **இத்காம் (إِدْغَامٌ) - இணைத்தல்**
2. **இஃக்ஃபா (إِخْفَاءٌ) - மறைத்தல்**
3. **இல்ஹார் (إِظْهَارٌ) - வெளியாக்குதல்**

### 3.1. இத்காம் (إِدْغَامٌ) - இணைத்தல்

இத்காம் என்பது, சுக்கூன் செய்யப்பட்ட மீமை அடுத்து இன்னும் ஒரு மீம் வந்தால் அந்த மீமுடன் சுக்கூன் செய்யப்பட்ட மீமை இணைத்து (ஷத்து செய்து) குன்னாவுடன் ஓதுதலாகும். (குன்னா என்பது மூக்கின் அடிப்பகுதியிலிருந்து வெளிப்படுத்தும் சத்தத்திற்குச் சொல்லப்படும்)

*உதாரணம்:*

مـ - أَطْعَمَهُـمْ مِّـنْ جُوْعٍ وَ ءَامَنَهُـمْ مِـنْ خَوْفٍ

மேற்கண்ட உதாரணத்தில் மீம் சுக்கூன் செய்யப்பட்டு அதையடுத்து இத்காமுடைய எழுத்து மீம் வந்துள்ளது. எனவே இத்காமுடைய சட்டத்தின் படி சுக்கூன் செய்யப்பட்ட மீமை இத்காமுடைய எழுத்தாகிய மீமுடன் இணைத்து (ஷத்து செய்து) குன்னாவுடன் ஓதவேண்டும்.

### 3.2. இஃக்ஃபா (إِخْفَاءٌ) - மறைத்தல்

இஃக்ஃபா என்பது, சுக்கூன் செய்யப்பட்ட மீமுக்குப் பின் பா(ب) என்ற எழுத்து வந்தால், சுக்கூன் செய்யப்பட்ட மீமை பாதியாக மறைத்து குன்னாவுடன் ஓதுதலாகும்.

*உதாரணம்:*

ب - تَرْمِيْهِـمْ بِـحِجَارَةٍ مِنْ سِجِّيْلٍ

மேற்கண்ட உதாரணத்தில் மீம் சுக்கூன் செய்யப்பட்டு அதையடுத்து இஃக்ஃபாவுடைய எழுத்து பா(ب) வந்துள்ளது. எனவே இஃக்ஃபாவுடைய சட்டத்தின் படி சுக்கூன் செய்யப்பட்ட மீமை பாதி மறைத்து குன்னாவுடன் ஓதவேண்டும்.

## 3.3. இல்ஹார் (إِظْهَارٌ) - வெளியாக்குதல்

இல்ஹார் என்பது, சுக்கூன் செய்யப்பட்ட மீமுக்குப்பிறகு மேலே கூறப்பட்ட பா, மீம் (ب ، م) அல்லாத ஏனைய 26 எழுத்துக்களில் ஏதாவது ஓர் எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட மீமை எந்த மாற்றமுமில்லாமல் உள்ளதை உள்ளபடியே வெளியாக்கி ஓத வேண்டும். இல்ஹாருடைய எழுத்துக்கள் 26 ஆகும். (அதாவது ب،م தவிர மற்ற அனைத்து எழுத்துக்களும் இல்ஹாருடைய எழுத்துக்களாகும்)

ا ء ت ث ج ح خ د ذ ر ز س ش ص ض ط ظ ع غ ف ق ك ل ن و هـ ي

*உதாரணம்:*

1. ا / ء - وَالَّذِيْنَ كَفَرُوْا بِأَيتِنَاهُـمْ أَصْحَابُ الْمَشْأَمَةِ
2. ت - اَلَـمْ تَـرَ كَيْفَ فَعَلَ رَبُّكَ بِأَصْحٰبِ الْفِيْلِ
3. ث - إِنَّ إِلَيْنَا إِيَابَهُـمْ ثُـمَّ إِنَّ عَلَيْنَا حِسَابَهُمْ
4. ج - جَزَآؤُهُمْ عِنْدَ رَبِّـهِمْ جَـنّٰتٌ
5. ح - وَمَا أُرْسِلُوْا عَلَيْهِـمْ حٰـفِظِيْنَ
6. خ - أُولَئِكَ هُـمْ خَـيْرُ الْبَرِيَّةِ
7. د - لَكُـمْ دِيْنُكُمْ وَلِيَ دِيْنِ
8. ذ - وَإِذَا غَرَبَتْ تَقْرِضُهُـمْ ذَاتَ الشِّمَالِ
9. ر - اِلٰفِهِمْ رِحْلَةَ الشِّتَآءِ وَالصَّيْفِ
10. ز - فَتَقَطَّعُوْا أَمْرَهُمْ بَيْنَهُـمْ زُبُرًا
11. س - وَالشَّـمْـسِ وَضُحٰهَا
12. ش - أُولَئِكَ هُـمْ شَـرُّ الْبَرِيَّةِ
13. ص - إِنْ كُنْتُـمْ صَـادِقِيْنَ

*உதாரணம்:*

14.ض - لَاأَبْرَحُ حَتَّى اَبْلُغَ مَجْمَعَ الْبَحْرَيْنِ اَوْ أَمْضِـيَ حُقُبًا

15.ط - وَ أَرْسَلَ علَيْهِـمْ طَـيْرًا أَبَابِيْلَ

16.ظ - وَدَانِيَةً عَلَيْهِـمْ ظِـلٰلُهَا وَذُلِّلَتْ قُطُوْفُهَا تَذْلِيْلًا

17.ع - فَوَسَطْنَ بِهِ جَـمْعًـا

18.غ - صِرَاطَ الَّذِيْنَ أَنْعَمْتَ عَلَيْهِـمْ غَـيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ

19.ف - أَلَـمْ يَـجْعَلْ كَيْدَهُـمْ فِـيْ تَضْلِيْلٍ

20.ق - وَإِذَا رَاَوْهُـمْ قَـالُوْا إِنَّ هٰؤُلَاءِ لَضَالُّوْنَ

21.ك - فَجَعَلَهُـمْ كَـعَصْفٍ مَأْكُوْلٍ

22.ل - إِنَّ سَعْيَكُـمْ لَـشَتَّى

23.ن - وَيَـمْـنَـعُوْنَ الْـمَاعُوْنَ

24.و - لَكُمْ دِيْنُكُـمْ وَلِيَ دِيْنِ

25.ه - وَاهْجُرُهُـمْ هَـجْرًا جَمِيْلًا

26.ي - أَلَـمْ يَـجْعَلْ كَيْدَهُمْ فِيْ تَضْلِيْلٍ

**விதிவிலக்கு:** சுக்கூன் செய்யப்பட்ட மீமுக்குப் பிறகு **ف** அல்லது **و** என்ற எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட மீமை நன்றாக வெளிப்படுத்தி ஓதவேண்டும்.

*உதாரணம்:*

1. ف - وَلَكُـمْ فِـي الْأَرْضِ

2. و - وَمِنْ آبَاءِهِـمْ وَذُرِّيَاتِـهِمْ

சுக்கூன் செய்யப்பட்ட மீமுடைய மூன்று சட்டங்களையும் உள்ளடக்கிய ஆயத்து 'சூரத்துல் புஸ்ஸிலத்திலுள்ள' பின்வரும் ஆயத்தாகும்.

وَذَلِكُمْ ظَنُّكُمُ الَّذِيْ ظَنَنْتُمْ بِرَبِّكُمْ اَرْدَاكُمْ فَأَصْبَحْتُمْ مِّنَ الْخٰسِرِيْنَ (فصلت 23)

# 4 ஷத்து செய்யப்பட்ட நூன் மற்றும் மீமின் சட்டங்கள்

நூன் அல்லது மீம் ஷத்து செய்யப்பட்டு வந்தால் இரண்டு விரல் அளவு குன்னா செய்து ஓத வேண்டும்.

## 4.1. ஷத்து செய்யப்பட்ட நூன்

*உதாரணம்:*

مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ

இங்கே الْجِنَّةِ وَالنَّاسِ (அல்ஜின்னதி வன்னாஸி) என்ற இரு வார்த்தையிலும் ஷத்து செய்யப்பட்ட நூன்கள் இருக்கின்றன. ஆகவே இரண்டு விரல் அளவு குன்னா செய்து ஓத வேண்டும்.

## 4.2. ஷத்து செய்யப்பட்ட மீம்

*உதாரணம்:*

عَمَّ يَتَسَاءَلُوْنَ

இங்கே عَمَّ (அம்ம) என்னும் வார்த்தையில் மீம் ஷத்து செய்யப்பட்டுள்ளது. ஆகவே இரண்டு விரல் அளவு குன்னா செய்து ஓத வேண்டும்.

**குறிப்பு:** ஷத்து செய்யப்பட்ட நூனிலோ அல்லது மீமிலோ ‘வக்ஃப்’ செய்தால் குன்னாவை மிக தெளிவு படுத்தி ‘வக்ஃப்’ செய்ய வேண்டும். உதாரணமாக,

وَقَرْنَ فِيْ بُيُوْتِكُنَّ

இங்கே ஷத்து செய்யப்பட்ட நூனில் ‘வக்ஃப்’ செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே (புயுதிகுன்) என்று குன்னாவை மிகத் தெளிவு படுத்தி ‘வக்ஃப்’ செய்யவேண்டும்.

# 5

# அல்-லாமுல் கமரிய்யா [சந்திர எழுத்துக்கள்]

## اللاَّمُ الْقَمَرِيَّةِ

அல்-லாமுல் கமரிய்யா என்பது, (اَلْ) அல்லுடைய லாமிற்குப் பிறகு ا ب ح خ ج ع غ ف ق ك و م ي هـ என்ற 14 எழுத்துக்களில் ஏதாவது ஓர் எழுத்து வந்தால் லாமுக்கு சுக்கூன் செய்து லாமையும் சேர்த்துப் படிக்க வேண்டும். இதற்கு "சந்திர எழுத்துக்கள்" என்று சொல்லப்படும்.

*உதாரணம்:*

1. ا - إِنَّ الْإِنْسَانَ
2. ب - رَبَّ هَذَا الْبَيْتِ
3. ج - الْجِنَّةِ
4. ح - الْحَمْدُ لِلّهِ
5. خ - الْخَنَّاسِ
6. ع - الْعَالَمِيْنَ
7. غ - وَلَا تَكُنْ مِنَ الْغَافِلِيْنَ
8. ف - يَوْمَ الْفَصْلِ
9. ق - الْقَارِعَةُ
10. ك - الْكَافِرُوْنَ
11. و - الْوَعْدُ
12. م - الْمَلَائِكَةُ
13. هـ - الْهُدَى
14. ي - فِي الْيَمِّ

# 6

# அல்–லாமுஷ் ஷம்ஷிய்யா [சூரிய எழுத்துக்கள்]

## اللاَّمُ الـشَّـمْـسِـيَّـةِ

அல்–லாமுஷ் ஷம்ஷிய்யா என்பது, (اَلْ) அல்லுடைய லாமிற்குப் பிறகு **ت ث د ذ ر ز س ش ص ض ط ظ ن ل** என்ற 14 எழுத்துக்களில் ஏதாவது ஓர் எழுத்து வந்தால் லாமை உச்சரிக்காமல் லாமுக்குப் பின்னால் உள்ள எழுத்தை ஷத்து செய்து படிக்க வேண்டும். இதற்கு 'சூரிய எழுத்துக்கள்' என்று சொல்லப்படும்.

*உதாரணம்:*

1. ت (التَّاءُ) - الـتَّـائِبُوْنَ
2. ث (الثَّاءُ) - الـثَّـمَرَاتِ
3. د (الدَّالُ) - الـدَّهْرِ
4. ذ (الذَّالُ) - الـذَّارِيَاتِ
5. ر (الرَّاءُ) - الـرَّاكِعُوْنَ
6. ز (الزَّايُ) - الـزَّقُّوْمِ
7. س (السِّيْنُ) - الـسَّـاعَةِ
8. ش (الشِّيْنُ) - الـشَّـمْسِ
9. ص (الصَّادُ) - الـصَّـبْرِ
10. ض (الضَّادُ) - الـضُّـحٰى
11. ط (الطَّاءُ) - الـطَّآمَّةُ
12. ظ (الظَّاءُ) - الـظَّالِمُوْنَ
13. ن (النُّوْنُ) - الـنَّـارُ
14. ل (اللاَّمُ) - الـلَّـيْلِ



# மத்தின் சட்டங்கள்

## اَلْـمَـدُّ

மத்து என்றால் நீட்டுதல் என்று பொருள், மத்துடைய எழுத்துக்கள் 3. அவை, ي ، ا ، و எளிதில் 'வாய்' என்று விளங்கிக் கொள்ளுங்கள்.

1. و சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து ـُ லம்மு செய்யப்பட்டு இருக்க வேண்டும்.
2. ا சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து ـَ பத்ஹு செய்யப்பட்டு இருக்க வேண்டும்.
3. ي சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து ـِ கஸ்று செய்யப்பட்டு இருக்க வேண்டும்.

இம்மூன்று எழுத்துக்களும் மேலே கூறப்பட்ட முறைப்பிரகாரம் வரும்போதுதான் அதற்கு 'மத்துடைய எழுத்து' என்று கூறப்படும். அப்படி வரவில்லையென்றால் அதற்கு மத்துடைய எழுத்து என்று சொல்லப்படமாட்டாது, சாதாரண ஓர் எழுத்தாகவே அதை நினைத்துக் கொள்ள வேண்டும்.

மத்து இரண்டு வகைப்படும். அவை,

1. **அல்-மத்துல் அஸ்லி (அடிப்படையான மத்து) - اَلْـمَدُّ الأَصْلِيُّ**
2. **அல்-மத்துல் ஃபரஇ (பிரிந்த மத்து) - اَلْـمَدُّ الْفَرَعِـيُّ**

### 7.1. அல்-மத்துல் அஸ்லி (அடிப்படையான மத்து) - اَلْـمَدُّ الأَصْلِيُّ

மத்துல் அஸ்லி என்பது, மத்துடைய எழுத்துக்கு முன் அல்லது பின் ஹம்ஸ்(ء) வராமலும் மற்றும் மத்துடைய எழுத்துக்குப் பின் சுக்கூன் வராமலும் இருக்க வேண்டும். இந்த நிபந்தனைக்குட்பட்டிருந்தால் அதனை இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

*உதாரணம்:*

1. و - غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ وَلَا الضَّالِّيْـنَ
2. ا - اِهْدِنَا الصِّرَاطَ الْـمُسْتَقِيْمَ
3. ي - الذِيْنَ يُؤْمِنُوْنَ بِالْغَيْبِ وَيُقِيْمُوْنَ الصَّلَوةَ وَمِـمَّا رَزَقْنٰهُمْ يُنْفِقُوْنَ

**விளக்கம்:** உதாரணம் 3–ஐ கவனிக்க يُقِيْمُوْنَ (யுகீமூன) என்னும் வார்த்தையில் (ي)யா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்து கஸர் செய்யப்பட்டு வந்துள்ளது. எனவே இது 'மத்து'டைய எழுத்தாகும். மத்துல் அஸ்லியுடைய சட்டத்தின் படி மத்துடைய எழுத்தான யா(ي)-விற்கு முன்னரோ, பின்னரோ ஹம்ஸ்(ء) வரவில்லை. மேலும் மத்துடைய எழுத்தான யா(ي)-விற்கு பின்னர் சுக்கூனும் வரவில்லை. இது மேற்கூறப்பட்ட நிபந்தனைக்குட்பட்டிருப்பதால் இது மத்துல் அஸ்லியாகும். (அடிப்படையான மத்தாகும்) ஆகவே யா(ي)-வை இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும்.

1. **அல்மத்துல் பதல் – ஹம்ஸ்(ء)-ன் காரணமாக ஏற்படும் மத்து**
2. **மத்துஸ்ஸிலத்திஸ் ஸுக்ரா – ஹா(ـه)-வின் காரணமாக ஏற்படும் மத்து**
3. **அல்மத்துல் இவழ் – பத்ஹதைன்(ـً) மூலமாக ஏற்படும் மத்து**

### 7.1.1. அல்-மத்துல் பதல் - اَلْمَدُّ الْبَدَل

மத்துல் பதல் என்பது, மத்துடைய எழுத்திற்கு முன் ஹம்ஸ்(ء) வருவதற்குச் சொல்லப்படும். இதனை இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

*உதாரணம்:*

1. و - فَأَمَّا مَنْ أُوْتِيَ
2. ا - وَأَمَّا مَنْ ءَامَنَ
3. ي - وَيَزْدَادَ الَّذِيْنَ ءَامَنُوْا إِيْمَانًا

**விளக்கம்:** உதாரணம் 2–ஐ கவனிக்க, இங்கு (ا)அலிஃப் சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் பதஹ் வந்துள்ளதால் இது மத்துடைய எழுத்தாகும். மேலும் மத்துல் பதல் உடைய சட்டத்தின்படி மத்துடைய எழுத்திற்கு முன் ஹம்ஸ்(ء) வந்துள்ளது. எனவே இதனை இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும். இது போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

**முக்கிய குறிப்பு: அலிப்(ا) மற்றும் ஹம்ஸ்(ء) பற்றிய விளக்கம்**

வார்த்தையின் ஆரம்பத்தில் அலிஃப்(ا) வடிவத்தில் வரக்கூடியதை ஹம்ஸ்(ء) என்று புரிந்து கொள்ளவேண்டும். அலிஃபுக்கு மேல் ஹம்ஸ் எழுதப்படாமல் இருந்தாலும் சரியே. மேலும் வார்த்தையின் எந்த இடத்தில் ஹம்ஸ்(ء) வந்தாலும் அதனை ஹம்ஸ்(ء) என்றே புரிந்து கொள்ளவேண்டும். மேலும் ئ ، ؤ ، أ இந்த குறியீடுகளையும் ஹம்ஸ்(ء) என்றே புரிந்து கொள்ளவேண்டும். ஆனால் வார்த்தையின் இடையில் அலிஃபுக்கு மேல் ஹம்ஸ்(ء) வராமல் அலிஃப்(ا) மாத்திரம் வந்தால் அதனை அலிஃப்(ا) என்பதாகவே புரிந்து கொள்ளவேண்டும்.

### 7.1.2. மத்துஸ்ஸிலத்திஸ் ஸுக்ரா - مَدُّ الصِّلَةِ الصُّغْرَى

மத்துஸ்ஸிலத்திஸ் ஸுக்ரா என்பது, ஹா(ـه) என்னும் எழுத்து ஹரக்கத்து செய்யப்பட்ட இரண்டு எழுத்துக்கு மத்தியில் வருமேயானால் அதை இரண்டு விரல்களை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும்.

*உதாரணம்:*

فَقَالَ لِصَاحِبِهٖ وَهُوَ يُحَاوِرُهٗٓ اَنَا اَكْثَرُ مِنْكَ مَالاً وَّاَعَزُّ نَفَرًا

**விளக்கம்:** மேலே கூறப்பட்ட உதாரணத்தில், அடிக்கோடிட்ட இடத்தில் ஹா(ـه) என்னும் எழுத்து இரண்டு ஹரக்கத்து செய்யப்பட்ட எழுத்துகளுக்கு மத்தியில் வந்திருப்பதால் இதற்கு மத்துஸ்ஸிலா என்று சொல்லப்படும். மத்துஸ்ஸிலாவின் சட்டத்தின் படி இந்த ஹாவை இரண்டு விரல் அளவு நீட்டி ஓத வேண்டும்.

### 7.1.3. அல்-மத்துல் இவழ் - اَلْمَدُّ الْعِوَضُ

மத்துல் இவழ் என்பது, "பத்ஹதைன்" வரக்கூடிய எழுத்தில் வக்ஃபு செய்து நிறுத்தினால் இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவு நீட்டி ஓதுவதற்குச் சொல்லப்படும்.

*உதாரணம்:*

1. أَلَمْ نَجْعَلِ الْأَرْضَ مِهَادًا
2. وَالْجِبَالَ أَوْتَادًا
3. وَخَلَقْنَاكُمْ أَزْوَاجًا

**விளக்கம்:** (மிஹாதன்) என்ற வார்த்தையில் வக்ஃபு செய்தால் (மிஹாதா) என்று இரண்டு விரல் அளவு நீட்டி "வக்ஃபு" செய்ய வேண்டும். இவ்வாறே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

**குறிப்பு:** வக்ஃபு செய்யக்கூடிய நேரத்தில் வக்ஃபு செய்யும் வார்த்தையின் கடைசி எழுத்திற்கு எந்தக் குறியீடு (ஹரக்கத்து) வந்தாலும் சுக்கூன் செய்தே வக்ஃபு செய்ய வேண்டும். வக்ஃபு செய்யாமல் சேர்த்துப் படித்தால் உரிய ஹரக்கத்தை ஓத வேண்டும். வக்ஃபு செய்யும் வார்த்தையின் கடைசி எழுத்திற்கு பத்ஹதைன் எனும் குறியீடு வந்தால் அங்கே சுக்கூன் செய்து நிறுத்தாமல் மேலே கூறிய உதாரணத்தைப் போல் இரண்டு விரல் அளவு நீட்டி ஓத வேண்டும்.

## 7.2. அல்-மத்துல் ஃபரஈ (பிரிந்த மத்து) - اَلْـمَدُّ الْـفَرَعِـيُّ

மத்துல் ஃபரஇ என்பது, மத்துடைய எழுத்திற்குப் பின் ஹம்ஸ்(ء) அல்லது சுக்கூன் வருவதற்குச் சொல்லப்படும். மத்துல் ஃபரஇ இரண்டு வகைப்படும்.

1. **ஹம்ஸ்(ء)-ன் காரணமாக ஏற்படும் மத்து**
2. **சுக்கூனின் காரணமாக ஏற்படும் மத்து**

### 7.2.1. ஹம்ஸ்(ء)-ன் காரணமாக ஏற்படும் மத்து

ஹம்ஸின் காரணமாக ஏற்படும் மத்து மூன்று வகைப்படும்.

1. **அல்-மத்துல் முத்தஸில்** - (اَلْوَاجِبُ) اَلْمَدُّ الْمُتَّصِلُ
2. **அல்-மத்துல் முன்பஸில்** - (اَلْجَائِزُ) اَلْمَدُّ الْمُنْفَصِلُ
3. **மத்துஸ்ஸிலத்தில் குப்ரா** - مَدُّاَلصِّلَةِ الْكُبْرَى

#### 7.2.1.1. அல்-மத்துல் முத்தஸில் - (اَلْوَاجِبُ) اَلْمَدُّ الْمُتَّصِلُ (சேர்ந்து வரும் மத்து)

மத்துல் முத்தஸில் என்பது, மத்துடைய எழுத்து ஒரு வார்த்தையில் வந்து அதே வார்த்தையில் அதனையடுத்து ஹம்ஸ்(ء) வந்தால் அதற்கு “மத்துல் முத்தஸில்” என்று சொல்லப்படும். இதை நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும்.

*உதாரணம்:*

1. و - سُوٓءَ الْعَذَابِ
2. ا - وَجَآءَ رَبُّكَ وَالْمَلَكُ صَفًّا صَفًّا
3. ي - وَجِيٓءَ يَوْمَئِذٍ بِجَهَنَّمَ

**விளக்கம்:** இரண்டைக் கவனிக்க, جَاءَ என்னும் வார்த்தையில், அலிஃப் சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் பதஹ் வந்துள்ளது. எனவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துல் முத்தஸிலுடைய சட்டத்தின் படி மத்துடைய எழுத்திற்குப்பிறகு பின் அதே வார்த்தையில் ஹம்ஸ்(ء) வந்துள்ளதால் இதனை நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

### 7.2.1.2. அல்-மத்துல் முன்பஸில் - (اَلْمَدُّ الْمُنْفَصِلُ (اَلْجَائِزُ) (பிரிந்து வரும் மத்து)

மத்துல் முன்பஸில் என்பது, மத்துடைய எழுத்து ஒரு வார்த்தையின் கடைசியில் வந்து அதனையடுத்துள்ள வார்த்தையின் ஆரம்பத்தில் ஹம்ஸ்(ء) வந்தால் அதற்கு "மத்துல் முன்பஸில்" என்று சொல்லப்படும். இதனை நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும். (இந்த வகை மத்தில் மேல் கூறப்பட்ட அளவு நீட்டி ஓத வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. அப்படி ஓதுவது நல்லது. குறைந்தது இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்காவது நீட்டி ஓதவேண்டும்)

*உதாரணம்:*

1. و - وَمَآ أُمِرُوْا إِلَّا لِيَعْبُدُوْا اللهَ مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ حُنَفَاءَ
2. ا - كَلَّآ إِنَّ الْإِنْسَانَ لَيَطْغَى
3. ي - اِرْجِعِيٓ إِلَى رَبِّكِ رَاضِيَةً مَرْضِيَّةً

**விளக்கம்:** மூன்றைக் கவனிக்க, اِرْجِعِيٓ إِلَى என்னும் வார்த்தையில் (ي)யா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் கஸர் வந்துள்ளது. எனவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துல் முன்பஸிலுடைய சட்டத்தின் படி மத்துடைய எழுத்திற்குப் பின் அதனையடுத்துள்ள வார்த்தையின் ஆரம்பத்தில் ஹம்ஸ்(ء) வந்துள்ளதால் இதனை நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

### 7.2.1.3. மத்துஸ்ஸிலத்தில் குப்ரா - مَدُّالصِّلَةِ الْكُبْرَى

மத்துஸ்ஸிலத்தில் குப்ரா என்பது, ஹா(ـه) என்னும் எழுத்து ஹரக்கத்து செய்யப்பட்ட இரண்டு எழுத்துக்கு மத்தியில் வந்து ஹா(ـه)-வுக்குப் பின் ஹம்ஸ்(ء) வருமேயானால் இதற்கு மத்துஸ்ஸிலத்தில் குப்ரா என்று சொல்லப்படும். இதனை நான்கு விரல்களை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும்.

*உதாரணம்:*

قَالَ لَهُ صَاحِبُهُ وَهُوَيُحَاوِرُهُ أَكَفَرْتَ بِالَّذِيْ خَلَقَكَ

**விளக்கம்:** மேலே கூறப்பட்ட உதாரணத்தில், அடிக்கோடிட்ட இடத்தில் ஹா(ـه) என்னும் எழுத்து இரண்டு ஹரக்கத்து வெய்யப்பட்ட எழுத்துகளுக்கு மத்தியில் வந்து அதற்குப் பிறகுள்ள எழுத்து ஹம்ஸ்(ء)–ஆக இருப்பதால் இதற்கு மத்துஸ்ஸிலத்துல் குப்ரா என்று சொல்லப்படும். ஆகவே இந்த ஹாவை நான்கு விரல் அளவு நீட்டி ஓத வேண்டும்.

### 7.2.2. சுக்கூனின் காரணமாக ஏற்படும் மத்து

சுக்கூனின் காரணமாக ஏற்படும் மத்து இரண்டு வகைப்படும்.

1. **அல்-மத்துல் ஆரில் லிஸ்ஸுக்கூன்** - (اَلْجَائِزُ) اَلْمَدُّ الْعَارِضُ لِلسُّكُوْنِ
2. **அல்-மத்துல் லாஸிம்** - اَلْمَدُّ اللاَّزِمُ

### 7.2.2.1. அல்-மத்துல் ஆரில் லிஸ்சுக்கூன் - (اَلْجَائِزُ) اَلْمَدُّ الْعَارِضُ لِلسُّكُوْنِ

**இடையில் ஏற்பட்ட சுக்கூனின் மத்து (வக்ஃப் செய்யும் நேரத்தில் மாத்திரம்)**

மத்துல் ஆரில் லிஸ்சுக்கூன் என்பது, மத்துடைய எழுத்திற்குப் பிறகு ஏதாவது ஒரு ஹரக்கத்துள்ள எழுத்து வந்து மூச்சுத்திணறலினாலோ அல்லது நிறுத்தி ஓதும் காரணங்களினாலோ அந்த எழுத்தில் நிறுத்தினால் அந்த எழுத்துக்கு (ـً)பத்ஹத்தைனைத் தவிர வேறு எந்தக் குறியீடு (ஹரகத்து) இருந்தாலும் சரி அந்த எழுத்துக்கு சுக்கூன் செய்தே நிறுத்த வேண்டும். இதற்கு மத்துல் ஆரில் லிஸ்சுக்கூன் (அதாவது இடையில் வந்த சுக்கூனின் மத்து) என்று சொல்லப்படும். காரணம் நிறுத்தி ஓதும் போது சுக்கூனும், அதற்கு பின்னால் உள்ள வார்த்தையோடு சேர்த்து ஓதும் போது அதற்குள்ள ஹரக்கத்தையும் ஓதுவதினால் இந்தப் பெயர் கூறப்படும், இதனை இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

*உதாரணம்:*

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ

**விளக்கம்:** மேற்கூறப்பட்ட உதாரணத்தில் (ي)யா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் மீம்(مـ) கஸர் செய்யப்பட்டு வந்துள்ளது. எனவே இது மத்துடைய எழுத்தாகும். رَبِّ الْعَالَمِـيْنَ (ரப்பில் ஆலமீன்) ஆலமீன என்னும் நூனுக்கு பத்ஹு செய்யப்பட்டிருக்கின்றது. ஆனால் இங்கு ஆயத்து (வசனம்) முடிவடைவதால் நாம் நிறுத்தி ரப்பில் ஆலமீன் என்று நூனுக்கு சுக்கூன் செய்து ஓதுகின்றோம். அதற்குப் பின்னால் உள்ள வார்த்தையோடு இதை சேர்த்து ஓதும் போது நூனுக்கு பத்ஹு செய்தே ஓதுவோம். எனவே இந்த சுக்கூனுக்கு, இடையில் வந்த சுக்கூன் என்று சொல்லப்படும். இதனை இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு விரல்கள் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

பின் வரும் மத்துல் லீனும் மத்துல் இவழைச் சேர்ந்ததுதான். இந்த இரண்டு வகையிலும் வக்பு செய்யும் போது மாத்திரம் மத்து செய்ய வேண்டும்.

## அல்-மத்துல்லீன் - اَلْمَدُّ اللِّيْنْ

மத்துல் லீன் என்பது, வக்ஃபு செய்யக்கூடிய கடைசி எழுத்துக்கு முன்னால் வரக்கூடிய எழுத்து சுக்கூன் செய்யப்பட்ட வா(و) வாக அல்லது யா(ي) வாக இருந்து அதற்கு முன்னால் உள்ள எழுத்து பத்ஹு செய்யப்பட்டிருந்தால் இதற்கு மத்துல் லீன் என்று சொல்லப்படும். இதை இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு விரல்களை மடக்கக்கூடிய அல்லது நீட்டக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும். வக்ஃபு செய்யாமல் சேர்த்துப்படிக்கும் போது நீட்டக்கூடாது.

*உதாரணம்:*

1. و - عَلَيْهِمْ دَائِرَةُ السَّوْءِ
2. ي - لِإِيْلَافِ قُرَيْشٍ

### 7.2.2.2. அல்-மத்துல் லாஸிம் - اَلْمَدُّ اللاَّزِمُ

மத்துல் லாஸிம் என்பது, மத்துடைய எழுத்திற்க்குப்பின் அதே வார்த்தையில் அல்லது அதே எழுத்தில் சேர்த்துப்படிக்கும் போதும் நிறுத்திப்படிக்கும் போதும் சுக்கூன் வருவதற்கு சொல்லப்படும். மத்துல் லாஸிம் நான்கு வகைப்படும்,

1. **அல்-மத்துல் லாஸிம் கலிமி முதக்கல்** - اَلْمَدُّ اللاَّزِمُ الْكَلِمِي الْمُثَقَّلِ
2. **அல்-மத்துல் லாஸிம் கலிமி முகஃப்பஃப்** - اَلْمَدُّ اللاَّزِمُ الْكَلِمِي الْمُخَفَّفِ
3. **அல்-மத்துல் லாஸிம் ஹர்ஃபி முதக்கல்** - اَلْمَدُّ اللاَّزِمُ الْحَرْفِي الْمُثَقَّلِ
4. **அல்-மத்துல் லாஸிம் ஹர்ஃபி முகஃப்பஃப்** - اَلْمَدُّ اللاَّزِمُ الْحَرْفِي الْمُخَفَّفِ

#### அல்-மத்துல் லாஸிம் கலிமி முதக்கல் - اَلْمَدُّ اللاَّزِمُ الْكَلِمِي الْمُثَقَّلِ

மத்துல் லாஸிம் கலிமி முதக்கல் என்பது, ஒரு வார்த்தையில் மத்துடைய எழுத்து வந்து, அதே வார்த்தையில் அதை அடுத்து (ஷத்து) செய்யப்பட்ட எழுத்து வருவதற்கு சொல்லப்படும். இதனை ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

*உதாரணம்:*

وَوَجَدَكَ ضَـالًّا فَهَدٰى

**விளக்கம்:** 'ளால்லன்' என்ற வார்த்தையில் அலிஃப் சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து பத்ஹ் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துடைய எழுத்திற்குப்பிறகு அதே வார்த்தையில் 'லாம்' ஷத்து செய்யப்பட்டிருக்கின்றது. மத்துல்லாஸிம் கலிமி முதக்கல் சட்டத்தின்படி இங்கே ஆறு விரல் அளவு நீட்டி ஓதுவது அவசியமாகும்.

#### அல்-மத்துல் லாஸிம் கலிமி முகஃப்ஃபஃப் - اَلْمَدُّ اللاَّزِمُ الْكَلِمِي الْمُخَفَّفِ

மத்துல் லாஸிம் கலிமி முகஃப்ஃபஃப் என்பது, ஒரு வார்த்தையில் மத்துடைய எழுத்து வந்து, அதே வார்த்தையில் அதை அடுத்து சுக்கூன் செய்யப்பட்ட எழுத்து வருவதற்கு சொல்லப்படும். இதனை ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

*உதாரணம்:*

ءَ الْـئٰنَ وَقَدْ عَصَيْتَ قَبْلُ وَكُنْتَ مِنَ الْـمُفْسِدِيْنَ

**விளக்கம்:** 'ஆல்ஆன' என்ற வார்த்தையில் அலிஃப் சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து பத்ஹ் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துடைய எழுத்திற்குப்பிறகு அதே வார்த்தையில் 'லாம்' சுக்கூன் செய்யப்பட்டிருக்கின்றது. மத்துல்லாஸிம் கலிமை முகஃப்ஃபஃபின் சட்டத்தின்படி இங்கே ஆறு விரல் அளவு நீட்டி ஓதுவது அவசியமாகும்.

## அல்-மத்துல் லாஸிம் ஹர்ஃபி முதக்கல் - اَلْمَدُّ اللاَّزِمُ الْحَرْفِـيُ الْمُثَقَّلِ

மத்துல் லாஸிம் ஹர்பி முதக்கல் என்பது, எழுத்து வடிவத்தில் சூராக்களின் ஆரம்பத்தில் வரக்கூடிய எழுத்துக்கள் மூன்றெழுத்துக்களைக்கொண்டுள்ள வடிவத்தில் வந்து, அதன் நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருந்து, அதற்குப்பின் உள்ள எழுத்து (சுக்கூன் செய்யப்பட்டு அந்த சுக்கூன் செய்யப்பட்ட எழுத்து அதற்கு பின் உள்ள எழுத்தோடு) இத்காம் செய்யப்பட்டிருப்பதற்குச் சொல்லப்படும். இதனை ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்

*உதாரணம்:*

الٓـمّٓ

**விளக்கம்:** 'அலிஃப், லாம், மீம்' இதை எழுத்து வடிவத்தில் அரபியில் எழுதும் போது أَلِفْ ، لَامْ ، مِيْمْ என்று எழுதுவோம். இங்கே 'லாமை' பாருங்கள்! இது லாம், அலிஃப், மீம் என்று மூன்று எழுத்துக்களைக் கொண்டு எழுதப்பட்டிருக்கின்றது. இதனுடைய நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருக்கின்றது. அதாவது 'அலிஃப்' சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து பத்ஹ் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த மத்துடைய எழுத்திற்கு பின்னுள்ள எழுத்து 'மீம்' சுக்கூன் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த சுக்கூன் செய்யப்பட்ட 'மீம்' அதற்கு பின்னுள்ள மீமோடு இத்காம் செய்யப்பட்டிருக்கின்றது. படிக்கும் போது லாம்மீம் என்று ஷத்து செய்து ஆறு விரல் அளவு நீட்டி ஓத வேண்டும்.

## அல்-மத்துல் லாஸிம் ஹர்ஃபி முகஃப்ஃபஃப் - اَلْمَدُّ اللاَّزِمُ الْحَرْفِي الْمُخَفَّفِ

மத்துல் லாஸிம் ஹர்பி முகஃப்ஃபஃப் என்பது, எழுத்து வடிவத்தில் சூராக்களின் ஆரம்பத்தில் வரக்கூடிய எழுத்துக்கள் மூன்றெழுத்துக்களை கொண்டுள்ள வடிவத்தில் வந்து, அதன் நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருந்து, அதற்குப்பின்னுள்ள எழுத்து (சுக்கூன் செய்யப்பட்டதாக இருந்து அந்த சுக்கூன் செய்யப்பட்ட எழுத்து அதற்கு பின் உள்ள எழுத்தோடு) இத்காம் செய்யப்படாமலிருப்பதற்கு சொல்லப்படும். இதனை ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்.

*உதாரணம்:*

نٓ وَالْقَلَمِ وَمَا يَسْطُرُوْنَ

மத்துல் லாஸிம் ஹர்பை முகஃப்ஃபஃபுக்கு வரக்கூடிய எழுத்துக்கள்,

اَلصَّادُ ، اَلْـمِيْمُ ، اَلْعَيْنُ ، اَلنُّوْنُ ، اَلْكَافُ ، اَلْقَافُ

**விளக்கம்:** நூனுடை உச்சரிப்பை எழுத்து வடிவத்தில் அரபியில் எழுதும் போது نُوْنْ என்று எழுதுவோம். இங்கே நடு எழுத்து மத்துடைய எழுத்தாகும். மத்துடைய எழுத்திற்கு பின்னுள்ள எழுத்து ஷத்து செய்யப்படாமல் சுக்கூன் செய்யப்பட்டிருக்கின்றது. இதற்கு மத்துல் லாஸிம் ஹர்பை முகஃப்ஃபஃப் என்று சொல்லப்படும். இதனை ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும். மற்ற உதாரணங்களையும் இவ்வாறே விளங்கிக் கொள்ளவும்.

## சூராவின் ஆரம்பத்தில் எழுத்து வடிவத்தில் வரக்கூடிய மத்துடைய எழுத்துக்களின் சட்டங்கள்

குர்ஆனுடைய சூராவின் ஆரம்பங்களில், வரக்கூடிய எழுத்துக்கள் பதினான்கு.

ص، ح، ط، ر، ي، ق، ك، م، ع، ا، ل، س، ن، ة

சுருக்கமாக صَحَّ طَرِيْقُكَ مَعَ السُّنَّةِ என்று கூறலாம். இவைகள் மூன்று வகை.

**1. அறவே மத்து செய்யக்கூடாது:**

இது ஒரு எழுத்தாகும். ا - (அலிஃப்). அலிஃபில் மத்து இல்லை. உதாரணமாக (الم) இங்கு அலிஃபை மத்து செய்யாமல் சாதாரணமாக ஓத வேண்டும்.

**2. இரண்டு எழுத்தின் வடிவத்தில் எழுதப்பட்டு இரண்டாவது எழுத்து மத்துடைய எழுத்தாக இருப்பது:**

இவைகள் ஐந்து எழுத்துக்களாகும். ح ، ي ، ط ، هـ ، ر

சுருக்கமாக حَـيٌّ طَـهُـرَ என்று சொல்லலாம். حا ، يا ، طا ، ها ، را என இரண்டு எழுத்தாக எழுதப்படும். இவைகளை இரண்டு விரல்களை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும்.

**3. மூன்று எழுத்தின் வடிவத்தில் எழுதப்பட்டு நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருப்பது:**

இவைகள் எட்டு எழுத்துக்களாகும். ن ، ق ، ص ، ع ، س ، ل ، ك ، م

சுருக்கமாக نَقَصَ عَسَلُكُمْ என்று சொல்லலாம். نون، قاف، صاد، سين، لام كاف، ميم என மூன்று எழுத்தின் வடிவத்தில் எழுதப்படும். இவைகளை ஆறு விரல்களை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும். ع-னை மாத்திரம் நான்கு அல்லது ஆறு விரல் அளவிற்கு நீட்டி ஓதலாம். காரணம் இதன் நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இல்லை.

8

# றா'வின் சட்டங்கள்

# أَحْكَامُ الرَّاءِ

## 8.1. வல்லினமாக ஓதும் இடங்கள்:

றா பத்ஹூ அல்லது லம்மு செய்யப்பட்டிருந்தால்,

*உதாரணம்:*

رُزِقْنَا - رَبَّنَا

றா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து பத்ஹூ அல்லது லம்மு செய்யப்பட்டிருந்தால்,

*உதாரணம்:*

وَقُرْآنًا - فَارْتَقِبْ

ஹம்ஸத்துல் வஸ்லுக்குப்பின் சுக்கூன் செய்யப்பட்டதாக றா வந்தால்,

*உதாரணம்:*

اِرْجِعُوْا إِلَى أَبِيْكُمْ - أَمِارْتَابُوْا - لِمَنِ اِرْتَضَى

அடிப்படையான கஸ்றுக்கு அடுத்ததாக றா சுக்கூன் செய்யப்பட்டு, றாவுக்கு அடுத்ததாக இஸ்திஃலாவுடைய எழுத்துக்களில் (خ ص ض غ ط ق ظ) ஒன்று அதே வார்த்தையில் கஸ்ர் செய்யப்படாத (பத்ஹ் அல்லது லம்மு செய்யப்பட்ட) நிலையில் வந்தால்,

*உதாரணம்:*

مِرْصَادًا - فِرْقَةٍ

வார்த்தையின் கடைசியில் றா ஹரக்கத்து செய்யப்பட்டுள்ளதாக இருந்து, வக்ஃபு செய்வதின் காரணமாக அதற்கு சுக்கூன் செய்தால், அந்த றாவையும் வல்லினமாக ஓத வேண்டும்.

*உதாரணம்:*

رَ - فَعَقَرَ - يُوَلُّوْنَ الدُّبُرَ - لَنْ تَبُوْرَ

رُ - بَرِقَ الْبَصَرُ - وَبِئْسَ الْقَرَارُ - تُرْجَعُ الأُمُوْرُ

رِ - كَلَمْحٍ بِالْبَصَرِ - وَتَوَاصَوْا بِالصَّبْرِ - بِالنُّذُرِ

### 8.2. மெல்லினமாக ஓதும் இடங்கள்:

றா கஸ்று செய்யப்பட்டிருந்தால்,

*உதாரணம்:*

فَرِحَ الْـمُخَلَّفُوْنَ - فَرِهَانٌ - رِدْءًا

றா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னால் உள்ள எழுத்து கஸ்று செய்யப்பட்டிருந்தால்,

*உதாரணம்:*

شِرْعَةً - مِرْيَةَ - فِرْعَوْنَ - اِسْتَغْفِرْ لَهُمْ

வக்ஃபின் காரணமாக றா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் சுக்கூன் செய்யப்பட்ட யா வந்தால்,

*உதாரணம்:*

خَـبِـيْـرٌ - خَيْرٌ

அடிப்படையான கஸ்றை அடுத்து றா சுக்கூன் செய்யப்பட்டு அதையடுத்து இஸ்திஃலா அல்லாத எழுத்து வந்தால்,

*உதாரணம்:*

وَفِرْعَوْنَ - وَفِرْدَوْس

றாவுக்கு பின்னால் சாய்த்துப்படிக்கும் அலிஃப் வந்தால்,

*உதாரணம்:*

مَـجْـرَيْهَا

وَقَالَ ارْكَبُوْا فِيْهَا بِسْمِ اللهِ مَجْرِيْهَا وَمُرْسَاهَا إِنَّ رَبِّيْ لَغَفُوْرٌ رَّحِيْمٌ (هود- ٤١)

# 9 அல்-கல்கலா

## اَلْقَلْقَلَة

கல்கலா என்பது, கல்கலாவுடைய எழுத்துக்களில் ஒன்று சுக்கூன் செய்யப்பட்ட நிலையில் வந்தால், அந்த எழுத்தை அழுத்தி ஓதுவதற்குச் சொல்லப்படும். கல்கலாவின் எழுத்துக்கள் ஐந்து,

ق ط ب ج د

சுருக்கமாக சொல்வதாக இருந்தால் قُطْبُ جَدٌّ என்று சொல்லலாம். கல்கலா இரண்டு வகைப்படும். அவை,

1. **அல்-கல்கலத்துல் குப்ரா (பெரிய கல்கலா) - اَلْقَلْقَلَةُ الْكُبْرَى**
2. **அல்-கல்கலத்துஸ் ஸுக்ரா (சிறிய கல்கலா) - اَلْقَلْقَلَةُ الصُّغْرَى**

## 9.1. அல்-கல்கலத்துல் குப்றா - اَلْقَلْقَلَةُ الْكُبْرَى

அல்–கல்கலத்துல் குப்றா என்பது, கல்கலாவுடைய எழுத்துக்களில் ஒன்று சுக்கூன் செய்யப்பட்ட நிலையில் வார்த்தையின் கடைசியில் வந்து, அங்கே நிறுத்தி ஓதினால், அந்த எழுத்தை மிக அழுத்தி (கல்கலா செய்து) ஓதுவதற்குச் சொல்லப்படும்.

*உதாரணம்:*

| | | |
|---|---|---|
| ق | - | قُلْ أَعُوْذُ بِرَبِّ الْفَلَقِ |
| ط | - | وَاللهُ مِنْ وَرَائِهِمْ مُـحِيْطٌ |
| ب | - | وَمِنْ شَرِّ غَا سِقٍ إِذَا وَقَبَ |
| ج | - | وَالسَّمَاءِ ذَاتِ الْبُرُوْجِ |
| د | - | لَـمْ يَلِدْ وَلَمْ يُوْلَـدْ |

## 9.2. அல்-கல்கலத்துல் ஸுக்ரா - اَلْقَلْقَلَةُ الصُّغْرَى

அல்–கல்கலத்துஸ் ஸுக்றா என்பது, கல்கலாவின் எழுத்துக்களில் ஒன்று வார்த்தையின் மத்தியில் சுக்கூன் செய்யப்பட்டு வந்தால், அந்த எழுத்தை மிகவும் அழுத்தாமல் இலேசாக அழுத்தி (கல்கலா செய்து) ஓதுவதற்குச் சொல்லப்படும்.

*உதாரணம்:*

| | | |
|---|---|---|
| ق | - | إِقْرَأْ بِاسْمِ رَبِّكَ |
| ط | - | الَّذِيْ أَطْعَمَهُمْ مِنْ جُوْعٍ |
| ب | - | وَالْعَادِيَاتِ ضَبْحًا |
| ج | - | إِنَّ إِلَى رَبِّكَ الرُّجْعَى |
| د | - | وَمَا أَدْرَاكَ مَاهِيَهْ |

# 10 வக்ஃப் (நிறுத்துதல்)

## اَلْـوَقْفُ

வக்ஃப் என்பது, குர்ஆனை மீண்டும் ஓத வேண்டும் என்ற நோக்கத்தில் மூச்சை எடுப்பதற்காக, கொஞ்ச நேரம் ஒரு வார்த்தையின் கடைசியில் சத்தத்தை நிறுத்துவதற்குச் சொல்லப்படும். வக்ஃபு நான்கு வகை,

### 10.1. வக்ஃபுன் இன்திளாரீ - وَقْفٌ إِنْتِظَارِيٌّ

வக்ஃபுன் இன்திளாரீ என்பது, பிரபல்யமான பத்து வகையான கிராஅத்துக்களில் பல கிராஅத்துக்களை ஒன்றாகச் சேர்த்து ஓதுவதற்காக நிறுத்துவதற்கு சொல்லப்படும்.

### 10.2. வக்ஃபுன் இக்திபாரீ - وَقْفٌ إِخْتِبَارِيٌّ

வக்ஃபுன் இக்திபாரீ என்பது, ஆசிரியர் கேள்வி கேட்பதினால் அல்லது ஆசிரியரிடத்தில் குர்ஆனை ஓதக்கூடிய நேரத்தில் ஏற்படும் வக்ஃப்.

### 10.3. வக்ஃபுன் இள்திராரீ - وَقْفٌ إِضْطِرَارِيٌّ

வக்ஃபுன் இள்திராரீ என்பது, மூச்சுத்திணறலினால் அல்லது தும்மலினால் அல்லது மறதியினால் அல்லது இது போன்ற வேறு காரணங்களினால் ஏற்படும் வக்ஃப். எந்த இடத்திலும் இப்படிப்பட்ட வக்ஃப் நிகழலாம். இப்படிப்பட்ட வக்ஃப் செய்யும் போது, கருத்து பரிபுரணமாக இருந்தால், அதற்கு பின்னுள்ள வார்த்தையில் இருந்து ஆரம்பிக்கலாம். கருத்து பரிபுரணமாகாமல் இருந்தால், விடுபட்ட வார்த்தையில் இருந்தே ஆரம்பிக்க வேண்டும்.

### 10.4. வக்ஃபுன் இக்தியாரீ - وَقْفٌ إِخْتِيَارِيٌّ

வக்ஃபுன் இக்தியாரீ என்பது, குர்ஆனை ஓதக்கூடியவர் மூச்சுத்திணறலினாலோ அல்லது அது போன்ற வேறு எந்தக் காரணங்களினாலோ வக்ஃபு செய்யாமல் அவரின் விருப்பத்தோடு வக்ஃபு செய்வதற்கு சொல்லப்படும். இந்த வகையைப்பற்றித்தான் இங்கு நாம் பேசப் போகின்றோம். வக்ஃபுன் இக்தியாரீ ஐந்து வகைப்படும். அவை,

1. **அல்-வக்ஃபுல் லாசிம்** - اَلْوَقْفُ اللاَّزِمُ
2. **அல்-வக்ஃபுத்தாம்** - اَلْوَقْفُ التَّامُّ
3. **அல்-வக்ஃபுல் காஃபி** - اَلْوَقْفُ الْكَافِيْ
4. **அல்-வக்ஃபுல் ஹஸன்** - اَلْوَقْفُ الْحَسَنُ
5. **அல்-வக்ஃபுல் கபீஹ்** - اَلْوَقْفُ الْقَبِيْحُ

**அல்-வக்ஃபுல் லாசிம் - اَلْوَقْفُ اللَّازِمُ** **(அவசியமான வக்ஃபு)**

அல்–வக்ஃபுல் லாசிம் என்பது, பின்னால் உள்ள வார்த்தையுடனோ அல்லது கருத்துடனோ முன்னால் உள்ள வார்த்தைக்கு எத்தொடர்பும் இல்லாமல் இருப்பது. அப்படி பின்னால் உள்ள வார்த்தையோடு சேர்த்துப் படிக்கும் போது தவறான கருத்து விளங்கப்படும் என்றிருந்தால் இதற்கு வக்ஃபுல் லாசிம் என்று சொல்லப்படும். இங்கே வக்ஃபு செய்து படிப்பது அவசியமாகும். இந்த வகை வக்ஃபை விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு சிறிய மீம் ஒன்று (مـ) அடையாளமிடப்பட்டிருக்கும்.

*உதாரணம்:*

إِنَّمَا يَسْتَجِيْبُ الَّذِيْنَ يَسْمَعُوْنَ ۘ وَالْمَوْتٰى يَبْعَثُهُمُ اللهُ ثُمَّ إِلَيْهِ يُرْجَعُوْنَ (الأنعام-٣٦)

இந்த ஆயத்தில் يَسْمَعُوْنَ என்னும் வார்த்தையில் சிறிய மீம் இருக்கின்றது, இது வக்ஃபுல் லாஸிமை காட்டுவதற்காக இடப்பட்ட அடையாளமாகும். இங்கே மூச்சை, பரிபுரணமாக நிறுத்தி வக்ஃபு செய்வது அவசியமாகும். பின்பு وَالْمَوْتٰى يَبْعَثُهُمُ اللهُ என்னும் வார்த்தையிலிருந்து புதிதாக ஆரம்பித்து ஓத வேண்டும்.

**அல்-வக்ஃபுத்தாம் - اَلْوَقْفُ التَّامُّ** **(பரிபூரணமானமான வக்ஃபு)**

அல்–வக்ஃபுத்தாம் என்பது, எந்த இடத்தில் நிறுத்தினால் கருத்து பரிபுரணமாகுமோ அவ்விடத்தில் நிறுத்துவதற்கு வக்ஃபுத்தாம் என்று சொல்லப்படும். அதாவது அதற்கு பின்னுள்ள வார்த்தையுடனோ அல்லது கருத்துடனோ சேர்த்துப் படிக்க வேண்டுமென்ற அவசியம் எதுவும் இல்லாமலிருப்பது. அப்படி சேர்த்துப் படித்தாலும் பெரும்பாலும் கருத்தில் எந்த மாற்றமும் ஏற்படாது. இந்த வக்ஃபு பெரும்பாலும் ஆயத்தின் முடிவில் அல்லது சரித்திரம் முடிவுறும் போது வரும்.

*ஆயத்தின் முடிவிற்கு உதாரணம்:*

مٰلِكِ يَوْمِ الدِّيْنِ

இங்கே நிறுத்துவது பரிபுரண வக்ஃபாகும்.

*சரித்திர முடிவிற்கு உதாரணம்:*

أُولٰئِكَ عَلٰى هُدًى مِّن رَّبِّهِمْ وَأُولٰئِكَ هُمُ الْمُفْلِحُوْنَ

இங்கே الْمُفْلِحُوْنَ என்னுமிடத்தில் வக்ஃபு செய்வது பரிபுரண வக்ஃபாகும். இந்த வகை வக்ஃபை விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (ط) (قلى) அடையாளமிடப்பட்டிருக்கும்.

## அல்-வக்ஃபுல் காஃபி - اَلْوَقْفُ الْكَافِيْ (போதுமான வக்ஃபு)

அல்–வக்ஃபுல் காஃபி என்பது, ஓர் இடத்தில் நிறுத்துவதினால் கருத்து பரிபுரணமடைகின்றது, ஆனால் வக்ஃபு செய்யப்பட்ட வார்த்தைகளின் கருத்து பின்னுள்ள வார்த்தைகளின் கருத்துக்களோடு சம்மந்தப்பட்டிருக்கும். (அதாவது முன்னுள்ள வார்த்தையின் கருத்தையும் பின்னுள்ள வார்த்தையின் கருத்தையும் சேர்த்துப் படித்தால் விளக்கம் அதிகம் கிடைக்கும்) ஆனால் பின்னுள்ள வார்த்தையோடு முன்னுள்ள வார்த்தையை சேர்க்க வேண்டுமென்ற அவசியமிருக்காது. இதற்கு வக்ஃபுல் காஃபி என்று சொல்லப்படும்.

*உதாரணம்:*

فِيْ قُلُوْبِهِمْ مَرَضٌ فَزَادَهُمُ اللهُ مَرَضًا ۚصلي وَلَهُمْ عَذَابٌ أَلِيْمٌ بِمَا كَانُوْا يَكْذِبُوْنَ (البقرة-٣٦)

**فَزَادَهُمُ اللهُ مَرَضًا** என்னும் வார்த்தையில் வக்ஃப் செய்வது போதுமானது. ஆனால் இதற்கு பின்னுள்ள **بِمَا كَانُوْا يَكْذِبُوْنَ** என்னுமிடத்தில் வக்ஃபு செய்வது முந்திய வார்த்தையில் வக்ஃபு செய்வதைவிட மிகவும் சிறந்தது. காரணம் முன்னுள்ள (**فَزَادَهُمُ اللهُ مَرَضًا**) என்னும் வார்த்தையை பின்னுள்ள (**بِمَا كَانُوْا يَكْذِبُوْنَ**) வார்த்தையோடு சேர்த்துப் படிக்கும் போதுதான் இதனுடைய பரிபுரணமான கருத்து விளங்கும். இவ்வாறே மற்ற ஆயத்துக்களையும் விளங்கிக் கொள்ளுங்கள். இந்த வகை வக்ஃபை விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (ج) (صلى) அடையாளமிடப்பட்டிருக்கும்.

## அல்-வக்ஃபுல் ஹஸன் - اَلْوَقْفُ الْحَسَنُ (அழகான வக்ஃபு)

அல்–வக்ஃபுல் ஹஸன் என்பது, ஓர் இடத்தில் நிறுத்துவதினால் கருத்து பரிபுரணமடைகின்றது, ஆனால் பின்னுள்ள வார்த்தையோடும் கருத்தோடும் இவ்வார்த்தைக்குத் தொடர்பிருக்கும். இதற்கு வக்ஃபுல் ஹஸன் என்று சொல்லப்படும்.

*உதாரணம்:*

وَإِنْ يَمْسَسْكَ اللهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهُ إِلَّا هُوَ صلى وَإِنْ يَمْسَسْكَ بِخَيْرٍ فَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ (الأنعام - ١٧)

**هُوَ** என்னும் இடத்தில் வக்ஃபு செய்வது வக்ஃபுல் ஹஸனாகும். ஆனால் பின்னுள்ள வார்த்தையோடு சேர்த்துப் படிப்பது நிறுத்திப் படிப்பதை விட மிகவும் சிறந்தது. காரணம் பின்னுள்ள வார்த்தையோடு சேர்த்துப் படிக்கும் போதுதான் இதனுடைய பரிபுரணமான கருத்து விளங்கும். இந்த வகை வக்ஃபை விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (ص) (صلى) அடையாளமிடப்பட்டிருக்கும்.

## அல்-வக்ஃபுல் கபீஹ் - اَلْوَقْفُ الْقَبِيْحُ (மோசமான வக்ஃபு)

அல்–வக்ஃபுல் கபீஹ் என்பது, எந்த வார்த்தையில் நிறுத்தினால் கருத்து பரிபுரணமாகாதோ அல்லது எந்த வார்த்தையில் நிறுத்தினால் தவறான கருத்து விளங்கப்படுமோ அங்கே நிறுத்துவது வக்ஃபுல் கபீஹாகும்.

*உதாரணம்:*

اَلْحَمْدُ لِلهِ

**اَلْحَمْـدُ** என்னுமிடத்தில் நிறுத்துவது வக்ஃபுல் கபீஹாகும். இங்கே நிறுத்துவதினால் கருத்து பரிபுரணமாகாது.

*தவறான கருத்து விளங்கப்படுவதற்கு உதாரணம்:*

لَقَدْ سَمِعَ اللهُ قَوْلَ الَّذِيْنَ قَالُوْا إِنَّ اللهَ فَقِيْرٌ لا وَنَحْنُ أَغْنِيَاءُ

**فَقِيْرٌ** என்னுமிடத்தில் நிறுத்துவது தவறான கருத்தை கொண்டுவரும். ஆகவே இங்கே நிறுத்துவது வக்ஃபுல் கபீஹாகும். இந்த வகை வக்ஃபை விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (لا) அடையாளமிடப்பட்டிருக்கும்.

**குறிப்பு:** *(∴)* இவ்வாறு மூன்று புள்ளிகளுள்ள அடையாளம் குர்ஆனில் தொடர்ந்து இரண்டு இடங்களில் வந்தால், ஓர் இடத்தில் நிறுத்துவது அவசியமாகும். ஓர் இடத்தில் நிறுத்தினால் மறு இடத்தில் நிறுத்தக்கூடாது.

*உதாரணம்:*

ذٰلِكَ الْكِتَابُ لَا رَيْبَ ∴ فِيْهِ ∴

(لَا رَيْبَ) என்னுமிடத்தில் நிறுத்தினால் (فِيْـهِ) என்னுமிடத்தில் நிறுத்தக்கூடாது. இவ்வாறே மற்ற ஆயத்துக்களையும் விளங்கிக் கொள்ளுங்கள்.

11

# எழுத்துக்கள் வெளியாகும் இடங்கள்

## مَخَارِجُ الْحُرُوْفِ






ء=ا இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவை உயர்த்தவும்கூடாது. குரல் அடித் தொண்டையிலிருந்து மெல்லியதாக ஒலிக்க வேண்டும்.




ب இரு உதடுகளையும் சேர்க்க வேண்டும். பற்களைச் சேர்க்கக்கூடாது. நாவை மேலே உயர்த்தவும் கூடாது குரல் அழுத்தமாக வெளிப்பட வேண்டும்.




ت இரு உதடுகளையும் பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் நுணிப்பகுதியை மேல் முன் பற்களிலும் அவற்றின் ஈறிலும் இலேசாக அழுத்த வேண்டும். குரல் நடுத்தரமாக ஒலிக்க வேண்டும்.




ث இரு உதடுகளையும் இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நுணி நாக்கு மேற்பல்லைத் தொட்டும் தொடாமலும் இருக்க வேண்டும். நுணி நாக்கு பல்லை விட்டும் சற்று வெளியே வரவேண்டும். குரல் மெல்லியதாக ஒலிக்க வேண்டும்.




ج இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் மத்திய பகுதி மேல் வாயை அழுத்தமாகத் தொட வேண்டும். குரல் அழுத்தமாக இருக்க வேண்டும்.



ح இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் கடைசிப்பகுதி மட்டும் சற்று மேலே உயர்ந்திருக்க வேண்டும். குரல் நடுத்தொண்டையிலிருந்து அழுத்தமாக ஒலிக்க வேண்டும்.



خ இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் இறுதிப் பகுதியை மட்டும் சற்று உயர்த்த வேண்டும். குரலை இலேசான காறலின் போதுள்ள கரகரப்புடன் முன்தொண்டையிலிருந்து வெளிப்படுத்த வேண்டும்.



د இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் நுணிப்பகுதி முன் மேற்பற்களை அழுத்தமாகத் தொட வேண்டும். குரல் வல்லோசையுடன் (வல்லினமாக) ஒலிக்க வேண்டும்.



ذ இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நுணி நாக்கு முன் மேற்பற்களின் வலது ஓரத்தை மிக இலேசாகத் தொட்டிட வேண்டும். குரல் சற்று மெல்லியதாக இருக்க வேண்டும்.



ر இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் வலது ஓரம் முழுவதும் கடைவாய்ப் பற்களின் ஈறை இலேசாகத் தொட வேண்டும். குரல் சுழலோசையுடன் வெளிப்பட வேண்டும்.




ز இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நுணி நாக்கு முன் மேற்பற்களின் நடுவில் இருக்க வேண்டும். குரல் அழுத்தமாக ஒலிக்க வேண்டும். குரல் விசில் ஓசையுடன் ஒலிக்க வெண்டும்.




س இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கைச் சற்று வளைத்து நாக்கின் இரு ஓரங்களையும் மேல் கடைவாய்ப் பற்களோடு உரசி உச்சரிக்க வேண்டும். குரல் மெல்லியதாக இருக்க வேண்டும்.




ش இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நுணி நாக்கை மேற்புறமாக சற்று மடக்கி வாயின் முகட்டின் பக்கமாக நெருக்கி வைத்துக் கொள்ள வேண்டும். காற்றை உள்ளிலிருந்து அழுத்தமாக பரவலாக வெளியிட வேண்டும்.




ص இவ்வெழுத்தை உச்சரிக்கும் போது இரு உதடுகளையும் பற்களையும் சேர்க்கக்கூடாது, நாவின் இடது, வலது பக்கத்தை வளைத்து, இரு புறமும் மேல் கடைவாய்ப் பற்களை அழுத்தமாகத் தொட வேண்டும். குரல் வாய் நிரம்ப ஒலிக்க வேண்டும்.




ض இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் வலது பகுதியைக் கொண்டு மேல் கடைவாய்ப் பற்களின் ஈறை இலேசாகத் தொட வேண்டும். குரல் மிக அழுத்தமாக இருக்க வேண்டும். வாய் நிரம்ப ஒலிக்க வேண்டும்.



ط இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவைக் கொண்டு முன் மேற்பற்களின் ஈறை நன்கு அழுத்த வேண்டும்.



ظ இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் இறுதிப்பகுதியை உள்வாயின் பின்பகுதியை தொடாத வண்ணம் சற்றே உயர்த்த வேண்டும். குரலை முன் தொண்டையிலிருந்து கரகரப்பு இல்லாமல் அழுத்தமாக வெளிப்படுத்த வேண்டும்.



ع இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் கடைசிப்பகுதி மட்டும் சற்று மேலே உயர்ந்திருக்க வேண்டும். குரல் நடுத் தொண்டையிலிருந்து அழுத்தமாக ஒலிக்க வேண்டும்.



غ இரு உதடுகளும் சேராமல் – ஆனால் நெருக்கமாக இருக்க வேண்டும். நுணிநாக்கு முன் மேற்பற்களை இலேசாகத் தொட வேண்டும். நாக்கின் நடுப்பகுதியைச் சற்று மேலே உயர்த்த வேண்டும். குரல் சற்றுத் தூக்கலாக இருக்க வேண்டும்.



ف இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, முன் பற்கள் கீழ் உதட்டின் ஈரமான பகுதியை இலேசாகத் தொட்டுக் கொண்டிருக்க வேண்டும். நாவு எழாமல் இருக்க வேண்டும். குரல் மிக மெல்லியதாக வெளிப்பட வேண்டும்.




ق இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் கடைசிப் பகுதியைக் கொண்டு உள்வாயின் மேற்பகுதியைச் சற்று அழுத்த வேண்டும். குரல் வாய் நிரம்ப ஒலிக்க வேண்டும்.




ك இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் பிற்பகுதி மேல்வாயைத் தொட்டிருக்க வேண்டும். குரல் மிக மெல்லியதாக இருக்க வேண்டும்.




ل இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் நுணிப்பகுதி முன் மேற்பற்களின் ஈறைச் சற்றுப் பின்னால் தொட வேண்டும்.




م இந்த எழுத்தை உச்சரிக்கும்போது இரு உதடுகளையும் சேர்க்க வேண்டும். பற்களைச் சேர்க்கக்கூடாது, நாவை மேலே உயர்த்தவும் கூடாது. குரல் மெல்லியதாக இருக்க வேண்டும்.




ن இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது, நாக்கின் நுணிப்பகுதி முன் மேற்பற்களின் ஈறின் ஆரம்பப்பகுதியை இலேசாகத் தொடவேண்டும். குரல் மூக்கிலிருந்து வரவேண்டும்.




ـه இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவை மேலே உயர்த்தவும் கூடாது. குரல் அடித்தொண்டையிலிருந்து மெல்லியதாக ஒலிக்க வேண்டும், அழுத்தமாக ஒலிக்கக்கூடாது.




و உதடுகளின் இரண்டு ஓரங்களையும் சேர்த்து வைக்ககவும், மத்தியில் சற்று இடைவெளி இருக்க வேண்டும். பற்களைச் சேர்க்கக்கூடாது. நாவு எழாமல் இருக்க வேண்டும். குரல் மெல்லியதாக இருக்க வேண்டும்.




ي இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் நடுப்பகுதி மேல்வாயைத் தொட்டும் தொடாமலும் இருக்க வேண்டும். குரல் நடுத்தரமாக இருக்க வேண்டும். நாவைக் கொண்டு முன் மேற்பற்களின் ஈறை நன்கு அழுத்த வேண்டும்.